

அனுபவங்கள் அனைத்தும் முடிந்து போன விளைவுகளே.
விளைவுகள் அனைத்தும் தற்காலிகமான தோற்றங்களே.
அனுபவங்களை சீரமைப்பது என்பது,
நல்ல அனுபவங்களை பிடித்து வைத்துக் கொள்வதும் மோசமான அனுபவங்களை அப்புறப்படுத்துவதும் அல்ல.
தோன்றும் அனுபவங்கள் எல்லாம் தாமாக வந்து தாமாக மறைந்து விடுவது என்பதே –அனுபவங்களை சீரமைப்பது ஆகும்.
முரண்படாமல் இருப்பது தான் உண்மையான சீரமைப்பாகும் .

- ஸ்ரீ பகவத்

பகவத் பாதை
தமிழ் மாத இதழ்



## ஸ்ரீ பகவத் குழல்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லை.

ஆதலால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு கட்டிட வேலைகள் நடைபெற்று வருகிறது.

இதில் 8 பெரிய அறைகளுக்கான ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர் சேர்க்கை நிறைவடைந்துவிட்டது.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்து இருக்கிறோம். அந்த வகையில் இதுவரை இரண்டு உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள். இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டும் சேர்க்கப்படவுள்ளனர்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கி தங்களுக்குச் சொந்தமாக பயன்படுத்திக் கொள்ளலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு ஸ்ரீபகவத் மிஷனின் அனுமதியோடு இவர்கள் தங்களது Membership – ஐ மற்றவர்களுக்கு மாற்றலாம்.

இவர்கள் இங்கு தங்காத நாட்களில் மட்டுமே மற்றவர்கள் ஞான முகாம் நடைபெறும் நாட்களில் மட்டும் தங்க அனுமதிக்கப்படுவார்கள். லாக்கர்களைப் பயன்படுத்தும் உரிமை அவர்களுக்குக் கிடையாது.

இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டுமே இணைக்கப்பட உள்ளதால், ஆர்வம் உள்ளவர்கள் உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

இது சம்பந்தமான சிறப்புத் தகவல்களுக்கு நேரடியாக போனில் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

அன்புடன்
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3. 99942 05880, 97891 65555

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

# உண்மை என்பது ஒன்றா? பலவா?



- ஸ்ரீ பகவத்

சாஸ்திரங்கள் ஒருபோதும், தற்காலிகமான உண்மையைப் பற்றிப் பேசுவதில்லை. அவை எப்போதும் முழு முதல் உண்மையைப் பற்றியே பேசுகின்றன.

ஆகவே,

சாஸ்திரங்கள் வெளிப்படுத்தும் உண்மை வேறானவை.

தற்காலிகமான அனுபவம் பற்றி, அவை பேச வரவில்லை. நிரந்தரமான உண்மையைப் பற்றியே அவை பேசுகின்றன.

அனுபவங்கள் அனைத்தும், தற்காலிகமானவைகளே. முழு முதல் உண்மைகள் அனைத்தும் அனுபவம் கடந்த நிலையில் உள்ளன.

அனுபவங்கள் அனைத்துக்கும், தோற்றமும் முடிவும் உண்டு.

அனுபவங்கள் அனைத்தும், முடிந்துபோன விளைவுகளே. விளைவுகள் அனைத்தும், தற்காலிகமான தோற்றங்களே.

தற்காலிகத் தோற்றங்கள் உண்மையாகவும் இருக்கலாம் அல்லது கனவு போன்ற, தோற்றமாகவும் இருக்கலாம்.

அனுபவங்கள் ஒருபோதும், முழு முதல் உண்மையாக முடியாது.

நமக்கு ஏற்படும் அனுபவங்கள், உண்மையை ஆதாரமாகக் கொண்டிருந்தாலுங் கூட, அவை முழு முதல் உண்மையாகாது.

அவை, வெறும் விளைவுகளாக இருப்பதால், அந்த விளைவுகள் யாவும், சில நிபந்தனைகளுக்கு உட்பட்டவையே ; Condition களுக்கு உட்பட்டவையே.

அத்தகைய விளைவுகள், சில குறிப்பிட்ட சூழ்நிலையில் மட்டுமே ஏற்பட முடியும்.

சூழ்நிலைகள் மாறும் போது, விளைவுகளும் மாறும்; அனுபவங்களும் மாறும்.

நிபந்தனைகளுக்கும், கட்டுப்பாடுகளுக்கும் உட்பட அனுபவங்கள் எவையும், முழுமுதற் உண்மையாக இருக்கமுடியாது.

அதனால்,

அனுபவங்களில், மெய்யான அனுபவம், பொய்யான அனுபவம் என்ற பிரிவு கிடையாது.

மொத்தமாகக் கருதும் போது,

எல்லா அனுபவங்களும் பொய்யானவையே; பொய்மையை அடித்தளமாகக் கொண்டவையே; வந்து வந்து போகும் தற்காலிகமான விளவுகளே.

அப்படி வந்து போகும் உணர்வுகள் அனைத்தும் பொய்யானவையே. அந்தப் பொய்மையான அனுபவங்களில், முரண்பாடுகளும் இருப்பது சகஜம்.

எந்த அனுபவங்களில், முரண்பாடுகள் அதிகமாக உள்ளன; எந்த அனுபவங்களில், முரண்பாடுகள் குறைவாக உள்ளன,

– என்பதில்தாம்,

நாம் உண்மையான அனுபவம், பொய்யான அனுபவம் எனப் பாகுபடுத்திக் கொள்கிறோம்.

மொத்தமாக எடுத்துப் பார்த்தோமானால், அனுபவங்கள் அனைத்தும் பொய்யானவையே ; நம்பகத் தன்மை இல்லாதவையே.

அனுபவங்கள் அனைத்தையும், அப்படியே நம்புவது என்பது,

நமது குழப்பத்தை அதிகரிப்பதாகவே அமைந்து விடும்.

இதனால்தான்,

கண்ணால் காண்பதும் பொய்; காதால் கேட்பதும் பொய்; தீர விசாரிப்பதே மெய்', என்ற கூற்று,

முக்கியத்துவம் உடையதாக அமைந்து விட்டது.

ஒருமைத் தன்மை குறித்து நாம் கேள்விப்பட்டுள்ளோம்.

அதிலுள்ள உள்ளார்ந்த உண்மைதான் என்ன?

'அத்வைதம்' என்பதிலும், 'ஏகம் சத்' என்பதிலும் உள்ள, முழுமுதல் உண்மைதான் என்ன?

சாஸ்திரங்கள் சுட்டிக் காட்ட முயலும், அந்த மாபெரும் உண்மைதான் என்ன?

அது புதிரானதா?

சராசரி மனிதரோடு தொடர்பு இல்லாததா?

அறிவுத்திறம் மிக்க ஆன்றோர்களால் மட்டும்தான் அடையக் கூடியதா? –அறியக் கூடியதா?

அந்த உண்மைதான் என்ன?

ஏகம் சத்' என்பது,

நம்முடைய இருப்பு நிலையைக் குறிக்கிறது.

அது நம்முடைய அனுபவ நிலையைக் குறிப்பதல்ல.

நம்முடைய அனுபவங்களுக்கெல்லாம் ஆதாரமான இருப்பு நிலையைக் குறிக்கிறது.

இருப்பு நிலை என்பது, இரண்டற்றது.

அனுபவங்கள் அனைத்தும் இரு தன்மையுடையவையே. அனுபவங்களுக்கு உட்பட்டது, அனுபவங்களுக்கு உட்படாதது என, அவை இரண்டு விதமான அம்சமாக உள்ளது.

அனுபவங்களால் அறிந்தது அனைத்தும், அனுபவங்களால் அறியப்படாதவற்றுக்கு, எதிராகத் திரும்பி விடுகின்றன.

இருப்பு நிலை என்பது, ஓர் அனுபவமல்ல. அது, அனுபவம் இல்லாத ஓர் அனுபவம்.

ஆரோக்கியமான உடல் எப்படி,

தான் இருப்பது தெரியாமல் இருந்து கொண்டிருக்கிறததோ,

அப்படி,

நம்முடைய இருப்புணர்வானது,

இருப்பது தெரியாமல், இருந்து கொண்டிருக்கிறது.

இருப்புணர்வுதான் **சத் அம்சம்.**

**ஒ**ருவனுக்கு சகல சித்திகளையும், சக்திகளையும் பெற்ற மகானைப் பார்த்து உபதேசம் பெற வேண்டும் என்று ஆசை. ஆனால் அவரை எங்கே சென்று எப்படி சந்திப்பது என்று தெரியவில்லை. வழிகாட்டவும் எவரும் முன்வரவில்லை.

ஆனாலும் அவன் பலரையும் விசாரித்துக்கொண்டிருந்தான்.

அவனுடைய ஆர்வத்தைக் கேள்விப்பட்ட துறவி ஒருவர், அவனுக்கு வழிகாட்ட முன் வந்தார்.

"நீ நேராக இமய மலைக்குச் செல். பிரம்ம தீர்த்தம் எங்கே இருக்கிறது என்று விசாரித்துக் கொண்டே செல். பிரம்ம தீர்த்தத்தில் பலரும் நீராடிக் கொண்டிருப்பார்கள். நீயும் அதில் நீராடு, நீராடி விட்டு, பிரம்ம தீர்த்தத்தின் கிழக்கு பக்கமாகச் செல்லும் பாதை வழியாகச் செல். அந்தப் பாதை வழியாக ஐந்து கிலோ மீட்டர் தூரம் சென்ற பிறகு அந்தப்பாதை இரண்டாகப் பிரியும்...

"அப்படி இரண்டாகப் பிரியும் பாதையில், இடப்பக்கமாகச் செல்லும் பாதை வழியாகச் செல். அந்தப் பாதையில் ஒரு கிலோ மீட்டர் நடந்து சென்றால், அந்தப் பாதையை மறைத்துக் கொண்டு, பிரம்மாண்டமான பாறை ஒன்று இருக்கும். அந்தப் பாறையோடு, பாதையும் முடிந்து விடும். அந்தப் பாறைக்கு கற்பூரம் காட்டி மூன்று வருடங்கள் வழிபட்டு வந்தால், அந்தப் பாறைக்குள்ளிருக்கும் சித்தர், வெளியே வந்து உனக்கு வேண்டிய உபதேசங்களைக் கூறுவார்."

இப்படிக் கூறினார். அந்த வழிகாட்டிய துறவி.

வழிகாட்டிய துறவியின், வழி காட்டுதலின் படி, இவனும் இமயமலை சென்றான். பிரம்ம தீர்த்தத்தைக் கண்டு பிடித்து, நீராடினான். வழிகாட்டிய துறவி கூறியபடியே சென்று அந்தப் பாறையையும் கண்டு பிடித்தான்.

அந்தப் பாறைக்குத் தினமும் கற்பூரம் காட்டி அந்தப் பாறையையே வழிபட்டு வந்தான். அதன் பக்கத்திலேயே சிறிய குடில் ஒன்றையும் அமைத்துக் கொண்டான்.

ஒருவழியாக மூன்று வருடங்கள் முடிந்து விட்டது. வழிகாட்டிய துறவியின், வழிகாட்டலின் படி, மூன்று வருடங்கள் பொறுமையாக அந்தப் பாறையை வணங்கி முடித்து விட்டான்.

அன்று பௌர்ணமி நாள். முழு நிலவு மேலெழும்பி வந்தது. அவன் ஆர்வத்துடன் காத்திருந்தான். ஆனால் அவன் எதிர்பார்த்த சம்பவம் நடக்கவில்லை.

பௌர்ணமி போய், அமாவாசையும் வந்து விட்டது அவன் ஆர்வமுடன் காத்திருந்தான்.

நடு இரவு. திடீரென அந்த மலையே கிடுகிடு என ஆடியது. அவன் வழிபட்டு வந்த உயர்ந்த பாறை அப்படியே வெடித்து இரண்டாகப் பிளந்தது.

அந்தப் பாறைக்குள்ளிருந்து ஒளிப்பிழம்பு ஒன்று வெளிப்பட்டது. அந்த ஒளிப்பிழம்புக்குள்ளிருந்து அந்த சித்தர் வெளிப்பட்டார்.

அவர் வேறு யாருமல்ல; வழிகாட்டிய அந்தத் துறவியே தான்.

"சுவாமி, நீங்கள்தான் அந்த சித்தரா?" அவன் அவரை வணங்கியபடிக் கேட்டான்.

"ஆமாம், குழந்தாய். முதலிலேயே கூறினால் நீ என்னை ஏற்றுக் கொள்ள மாட்டாய். நீ ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காகத்தான் இப்படி வர வேண்டியதாகி விட்டது"

–இப்படி,

உண்மை என்ற பெயரில் ஒரு பிரம்மாண்டத்தை நாம் எதிர் நோக்கி விடுகிறோம்.

உண்மை எப்போதும், வெறும் இருப்புணர்வாக மட்டுமே இருக்கிறது.

சத் அம்சத்தில் இருப்புணர்வு மட்டுமே உள்ளது.

அங்கு –

நான் இதை அறிகிறேன்; அதை அறிகிறேன் என்ற அனுபவம் கிடையாது.

மெய்ப் பொருளைப் பற்றி விளக்கும் போது, மெய்ப் பொருளானது

சத்தாகவும்,

சித்தாகவும்,

ஆனந்தமாகவும்

– இருப்பதாகக் கூறப்படுகிறது.

சத் என்பதுதான் ஆதார நிலை. அங்கு இரட்டை நிலையோ, அனுபவமோ கிடையாது.

ஆகவே சத் என்பது ஏகம் என்று குறிப்பிடப்படுகிறது.

நம்முடைய அனுபவங்களுக்கெல்லாம்

காரணம்,

மெய்ப் பொருளின் சித் அம்சமே.

சித் அம்சத்தின் மூலமாகவே, நமக்குப் பலவிதமான அனுபவங்கள் ஏற்படுகின்றன.

அனுபவங்கள் அனைத்தும் எல்லைப்படுத்தி அறிந்து கொள்ளும் ஓர் இயக்கமே.

எல்லைப் படுத்தாமல்,

நாம் எதனையும் அறிந்து கொள்ள முடியாது. புரிந்து கொள்ள வேண்டுமாயினும் சரி, அல்லது ஓர் அனுபவத்தைப் பெற வேண்டுமாயினும் சரி,

எல்லைப் படுத்தாமல் முடியாது.

பகுத்தறிவு என்பதே,

பிரித்துப் பார்ப்பது தான்; வகைப்படுத்திப் பார்ப்பதுதான்.

பகுத்துப் பார்ப்பதும் பிரித்துப் பார்ப்பதும்

– தவறானதா?

அப்படி செய்யக் கூடாதா? அவை குற்றமுடையவையா?

பிரித்துப் பார்க்காமலும், பகுத்துப் பார்க்காமலும், அனுபவித்துப் பார்க்காமலும்

– நம்மால் எதையும் செய்ய முடியாது.

நாம் எதையாவது செய்கிறோம் என்றால்,

அது

இவற்றின் உதவியோடு மட்டுமே.

ஆகவே நாம் செயல்பட வேண்டுமென்றால், நாம் அவற்றைக் குறையாக எடுத்துக் கொள்ள முடியாது.

பிரித்துப் பார்த்தலையும் அனுபவத்ததையும் ஒதுக்கி விட முடியாது.

நம்முடைய வாழ்வு என்பது,

முழுக்க முழுக்க,

நம்முடைய அனுபவங்களால் ஆக்கப்பட்டது. அனுபவங்களை அடைவதும் அனுபவங்களை வகைப்படுத்துவதும் அவற்றைப் பிரித்துப் பார்ப்பதும் தவிர்க்க முடியாதது.

அந்நிலையிலேயே நம்முடைய வாழ்வில் நாம் பங்கு பெற முடியும்.

சித் அம்சம்தான் நம்முடைய வாழ்வாக அமைந்துள்ளது.

சித் அம்சம் முழுவதும் அறிவும் அனுபவமுமாக அமைந்து உள்ளது.

ஆனால் இவை அனைத்தும், தற்காலிகமானவையே; தேவைக்கு ஏற்ப வந்து போகக் கூடியவைகளே.

நம்முடைய அனுபவங்களில் நாம் ஒரு நிரந்தரத் தன்மையை ஏற்படுத்த நினைக்குந் தோறும் நமது அனுபவங்களில் உள்ள இரட்டைத் தன்மை, உறுதி செய்யப்பட்டு விடுகிறது.

ஏதாவது ஓர் அனுபவத்தைத் தக்க வைக்கவோ,

ஏதாவது ஓர் அனுபவத்தை வரவிடாமல் பார்த்துக் கொள்ளவோ,

–நாம் முயற்சி செய்யுந் தோறும்

நமது மனோ அனுபவத்தில்,

நாம் ஒரு நிரந்தரத் தன்மைக்காகப் போராடி விடுகிறோம்.

இந்நிலையில்,

நம்முடைய மன அம்சமே – நம்முடைய சித் அம்சமே,

தனக்குள் இரு பிரிவாக இருந்து, தன்னைச் சீரமைக்கப் போராடி விடுகிறது.

தனக்குத் தானே இரு பிரிவாக இருந்து முரண்பட்டுக் கொள்கிறது.

நம்முடைய அனுபவத்தை ஒழுங்குபடுத்த வேண்டிய அவசியம் எதுவும் இல்லாத பட்சத்தில்,

நம்முடைய அனுபவங்கள், தாமாக வந்து தாமாக மறைந்து விடுகின்றன.

அவற்றைச் சீரமைக்க வேண்டிய அவசியமே அங்கு ஏற்படுவதில்லை.

அவை தாமாகவே தம்மை சீரமைத்துக் கொள்கின்றன.

**அனுபவங்களை சீரமைப்பது என்பது,**

**நல்ல அனுபவங்களைப் பிடித்து வைத்துக் கொள்வதும் மோசமான அனுபவங்களை அப்புறப்படுத்துவதும் அல்ல.**

**தோன்றும் அனுபவங்கள் எல்லாம் தாமாக வந்து தாமாக மறைந்து விடுவது என்பதே,**

**– அனுபவங்களைச் சீரமைப்பதாகும்.**

முரண்படாமல் இருப்பது தான் உண்மையான சீர் அமைப்பாகும்.

முரண்பாடுகள் தான் இருமையைத் தோற்றுவிக்கின்றன. இருமைதான் முரண்பாடுகளாக அமைந்திருக்கிறது.

முரண்படாத நிலையில் இருமையும் மறைந்துவிடுகிறது.

அந்நிலையில்,

நமது அனுபவங்களாலும் அறிவாலும் ஏற்படுத்தப்பட்ட எல்லைகளும் முடிவுகளும் பலம் இழந்து விடுகின்றன.

அந்நிலையில்,

இருமை இருந்தும் அவை பலமற்றிருக்கின்றன.

பன்மை இருந்தும் அவை பிரிவின்றி இருக்கின்றன.

துவைதம் இருந்தும் அது துவைதமாக இல்லை அதுவே அத்வைதம்.

இந்த ஒருமை, நாம் ஏற்படுத்திய ஒருமை அல்ல.

இருமைகள் எல்லாம் புறக்கணிக்கப்பட்டதால் தாமாக அமைந்திருக்கும் ஒருமை இது.

இந்த ஒருமைப்பாடு என்பது,

நாம் உணர்ந்து அறியும் ஓர் அனுபவம் அல்ல.

முரண்பாடுகள் அனைத்தும் மறைந்த நிலையே அது.

நாம் நமது அனுபவங்களோடு முரண்படும் நிலையில் நம்மை அனுபவிப்பவனாகவும் நமக்கு அனுபவம் ஏற்பட்டதாகவும் கருதிக் கொள்கிறோம்.

அனுபவிப்பவன் என்னும் ஒரு பகுதி, அனுபவம் என்னும் அடுத்த பகுதியுடன் முரண்படுகிறது.

இந்நிலையில்

நம்முடைய அனுபவத்தில் ஒரு பகுதியே தன்னை அனுபவிப்பவனாகக் கருதிக் கொள்கிறது.

அந்நிலையில்தான்,

முரண்பாடும் சாத்தியமாகிறது.

அனுபவிப்பவன் – அனுபவம் என்ற இரட்டை நிலை தான்.

அவை பலம் இழந்த நிலையில்,

இயற்கையாக உள்ளதுதான் அத்வைத நிலை.

ஒரு கரும்பலகையில் சிறியதாக ஒரு வட்டம் வரைந்திடுவதாக வைத்துக் கொள்வோம்.

இப்போது,

வட்டம் ஒரு பகுதியாகவும் வட்டத்துக்கு வெளியே உள்ளது ஒரு பகுதியாகும் அமைந்து விடுகிறது.

இந்த இரண்டையும் இணைப்பது எவ்வாறு?

வட்டத்துக்கு வெளியே உள்ளதை வட்டத்துக்குள் கொண்டு வர முடியுமா?

வட்டம் என்பது நாமாக வரைந்து கொண்டது.

வட்டம் வலுவிழந்து விட்டால்,

அங்கு இருப்பது தான் ஒருமைத் தன்மை.

வட்டம் என்பது அனுபவத்தை குறிக்கிறது.

ஒருமைத் தன்மையை நாம் அனுபவித்து அறிய வேண்டும் என்பது மொத்த கரும்பலகையையும் அந்த சிறிய வட்டத்துக்குள் கொண்டு வர விரும்புவதேயாகும்.

உண்மையில்,

பெரிய கரும்பலகையை சிறிய வட்டத்துக்குள் கொண்டு வருவதென்பது வட்டத்தின் எல்லையை உடைத்து விடுவதே; வட்டத்தின் எல்லையை விரித்து விடுவதே; வட்டமே இல்லாமல் போய்விடுவதே.

அனுபவங்களும் அறிவும் இல்லாமல் வாழ்வு என்பதே கிடையாது.

ஆன்மிகம் என்பது நம்முடைய வாழ்வுக்கு விரோதமானதா?

ஆன்மிகம் என்பது,

அனுபவங்களுக்கும், பிரித்து அறியும் அறிவுக்கும் விரோதமானதா?

ஆன்மிகம் என்பது எதற்கும் விரோதமானது அல்ல. அது எல்லாவற்றையும் ஏற்றுக் கொள்ளும் அடிப்படைத் தளமாக அமைந்துள்ளது. அது எல்லாவற்றுக்கும் இடம் அளிக்கும் விரிந்த ஆகாயமாக உள்ளது.

முரண்பாடுகள் அனைத்தும் நமது அனுபவங்களுக்குள்ளேதான் ஏற்படுகின்றன. **முரண்பாடு என்பது அனுபவத்துக்கும் அனுபவத்தை கடந்ததற்கும் இடையே ஏற்படுவது அல்ல.**

**முரண்பாடுகள் அனைத்தும் சுய முரண்பாடுகளே. முரண்பாடுகள் அனைத்தும் அனுபவங்களுக்குள்ளேயே ஏற்படும் சுய முரண்பாடுகளே.**

சுய முரண்பாடற்ற அனுபவங்களும் சுய முரண்பாடற்ற வாழ்வும் ஆன்மிக அனுபவங்களாகி விடுகின்றன; ஆன்மிக வாழ்வாகி விடுகின்றன.

அனுபவமும், பிரித்தறியும் அறிவும், பயனுடையதாகவும் மலர்வடைந்து விடுகின்றன.

முரண்பாடற்ற அனுபவங்களும் அறிவும் தெய்வீகமாகி விடுகின்றன; ஆன்மிகமாக இருக்கின்றன.

சுய முரண்பாடற்ற அனுபவங்கள்தாம் ஆன்மிகம்.

சுய முரண்பாடற்ற அறிவுதான் ஆன்மிகம்.

முரண்பாடற்ற வாழ்வுதான் ஆன்மிகம்.



V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

விடுதலை என்பது

## அடைதலா? விடுதலா?

மற்ற ஆன்மிக அமைப்பின் அணுகுமுறைக்கும் ஸ்ரீ பகவத் ஐயாவின் அணுகுமுறைக்கும் என்ன வித்தியாசம்?

**கேள்வி :** நான் ஆன்மிகத்தில் கடந்த ஐம்பது ஆண்டுகளாக பல்வேறு அமைப்புகளில் இருந்து வருகின்றேன்.

ஸ்ரீ பகவத் ஐயாவின் புத்தகங்களை தற்போதுதான் வாசித்து வருகின்றேன். YouTube வழியாக அவரது வீடியோக்களையும் பார்த்து வருகிறேன்.

எல்லா ஆன்மிக அமைப்புகளும் தியானத்தை வலியுறுத்தும்போது ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் 'தியானத்தை விடு ; ஞானத்தைப் பெறு' என்று கூறுகிறார்கள். மற்ற ஆன்மிக அமைப்புகளின் செயல்பாட்டிலிருந்து இருந்து இவரது வழிமுறை முழுவதுமாக வேறுபட்ட ஒரு தனித்தன்மையில் இருப்பதைப் போல் தோன்றுகிறது. மற்ற ஆன்மிக அமைப்புகளின் அணுகுமுறைக்கும் ஸ்ரீ பகவத் ஐயாவின் அணுகுமுறைக்கும் என்ன வித்தியாசம்?

**பதில் :** நீங்கள் சொல்லுவது 100% சரியே. இதுவரை வந்த அத்தனை ஆன்மிக அமைப்புகளின் செயல்பாட்டிலிருந்து ஸ்ரீ பகவத் அய்யாவின் அணுகுமுறை முற்றிலும் வித்தியாசமானது.

தனித்தன்மை வாய்ந்ததுதான் அதில் எந்த சந்தேகமும் இல்லை.

மற்ற அனைத்து ஆன்மிக அமைப்புகளும் அடைதல் அணுகுமுறையைப் பயன்படுத்துகிறார்கள்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் இதுவரை இல்லாத விடுதல் அணுகுமுறையைப் பயன்படுத்துகிறார்கள்.

இதுவரை ஆன்மிகத்தில் நம்முடைய மனதை நாம் விரும்பியபடி நமது கட்டுப்பாட்டில் கொண்டுவருவதற்காக பயிற்சி முயற்சிகள் மட்டுமே பல கொடுக்கப்பட்டு இருக்கின்றன.

இது வரை உள்ள ஆன்மிக அமைப்புகள் அனைத்தும் மனதில் நாம் ஏதாவது பயிற்சி செய்து ஏதோ ஒன்றை அடையும் முறைகளையே அடிப்படையாகக் கொண்டு கற்றுக்கொடுத்து வருகின்றன.

நம்முடைய முயற்சியால் மனதை கட்டுப்படுத்தும் பயிற்சி முயற்சி வழிமுறைகள் மட்டுமே இருந்து கொண்டிருக்கின்றன.

1. மனதில் தோன்றும் எதிர்மறை எண்ணங்களை மாற்ற நம் முயற்சியின் மூலம் நல்ல எண்ணங்களை விதைப்பது.

2. ஆட்டோ சஜஷன் (Auto suggestion) என்ற பயிற்சி முறையில் நமது மனதைகட்டுப்பாட்டில் வைக்க செய்யும் முயற்சிகள்.

3. நமது எண்ணங்கள் மூலம் நாம் விரும்பியபடி மனதை ஒருநிலைப்படுத்தும் அனைத்து தியான முறைகளும் - மனதை வடிவமைத்தல் (Mind tuning) முறைகளாகும். மனதில் ஏதோ ஒன்றை செய்து, ஏதோ ஒன்றை அடையும் முயற்சிகள் அனைத்துமே இதே வகையில் பொருந்தும்.

மந்திரங்கள், எந்திரங்கள், தந்திரங்கள், ருத்ராட்சம், காப்பு, மோதிரம், தகடு மற்றும் தாயத்து என பல-ஆன்மிக பொருட்களை அணிந்து கொள்வதும் மனதைக் கட்டுப்படுத்தும் முயற்சி வகைகள்.

இவை அனைத்துமே அடைதல் அணுகுமுறை.

மேலே குறிப்பிட்ட அனைத்து அணுகுமுறையிலிருந்து முற்றிலும் மாறுபட்ட அணுகுமுறையே ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அணுகுமுறை. இது மனதின் இயக்கத்தை புரிந்துகொள்வதன் மூலம் ஏற்படும் விடுதல் அணுகுமுறை.

மனம் என்பது இயற்கையின் இயக்கம். மனதின் இயக்கத்தில் நாம் செய்வதற்கென்று எதுவுமில்லை. மனதை நம்மால் நிரந்தரமாக நிர்வாகம் செய்யவும் முடியாது. அது நம் கட்டுப்பாட்டில் இல்லாத ஒரு இயந்திர கதியான இயக்கம். மனதிலிருந்து வெளிப்பட்டதை மட்டும் தான் உணர முடியுமே தவிர, நம்மால் வேறு எதையும் உணர முடியாது.

மனதின் இயக்கத்தைப் பற்றி புரிந்து கொள்ள வேண்டிய உண்மை இதுதான்.

மனதிலிருந்து வெளிப்பட்ட உணர்வுகளை, எண்ணங்களை செயலுக்கு வேண்டுமானால் எடுத்துச் சிந்தித்து செயல்படுத்திக் கொள்ளலாம்.

செயலே தேவைபடாத பட்சத்தில் மனதிலிருந்து வெளிப்பட்ட எண்ண உணர்வுகளை எதுவும் செய்யாமல் அப்படியே விட்டு விடலாம் என்ற மிக எளிமையான புரிதல் அணுகுமுறையே ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அணுகுமுறை.

இங்கு நாம் மனதில் எதையும் செய்வதே இல்லை. மனதை அப்படியே சுதந்திரமாக இயங்க விட்டு விடுகின்றோம். அதில் எல்லாவிதமான எண்ண உணர்வுகளும் தாமாக தோன்றி தாமாக மறைந்து கொண்டே இருக்கின்றன.

நமது செயலுக்குத் தேவையான எண்ண உணர்வுகளை மட்டும் எடுத்து நாம் செயல்படுத்தி கொள்கின்றோம். மற்றபடி மனதின் இயக்கத்தில் குறுக்கிடுவதற்கோ மாற்றுவதற்கோ எதுவும் இல்லை முடித்துக் கொள்கிறோம்.

உதாரணமாக நமது வீட்டிற்கு ஒரு காவலாளி (வாட்ச்மேன்) பாதுகாப்பிற்காக நியமித்து இருப்பதாக வைத்துக் கொள்வோம். வாட்ச் மேன் பணி என்ன? நம்மை பார்க்க யார் யார் வந்திருக்கிறார்கள் என்பதை தெரியப் படுத்துவதுதான் அவரது தலையாய பணி. நம்மை பார்க்க வருபவர்களில் சிலரை நமக்குப் பிடிக்கும், சிலரை நமக்குப் பிடிக்காமல் கூட இருக்கலாம். நமக்கு சிலரை பார்க்கப் பிடிக்காது என்பதினாலேயே "இனி யார் வந்து என்னைப் பார்க்க வந்திருக்கிறார்கள் என்பதை தெரிவிக்க கூடாது" என்று நாம் வாட்ச்மேன் மீது கோபம் கொள்ள மாட்டோம். நாம் அவர் மீது கோபம் கொண்டு அவரை பணிநீக்கம் செய்து விடுவதாக வைத்துக் கொள்வோம். பிறகு யார் நம்மை பார்க்க வந்திருக்கிறார்கள் என்பது நமக்குத் தெரியாது.

இதைப் போல்தான் இயற்கை நமக்கு கொடுத்திருக்கும் மிகப்பெரிய வாட்ச்மேன் இந்த மனம் என்ற கருவி. இறைவன் கொடுத்த கருவியை நாம் ஒருபோதும் குறைகாண வேண்டிய அவசியமில்லை.

நாம் ஒரு சூழ்நிலையை சந்திக்கும் போது நமது இயல்புக்கேற்ற எண்ண உணர்வுகளை வெளிப்படுத்தி கொண்டிருக்கும் ஒரு கருவியே மனம். அப்படி நம் மனம் காட்டும் போதுதான் அது சரியாக செயல்படுகிறது என்பது பொருள்.

அப்படி காட்டும் எண்ண உணர்வுகளில் சிலவற்றை நமக்கு பிடிக்கும் சிலவற்றை நமக்குப் பிடிக்காமல் கூட இருக்கலாம். பிடித்த உணர்வுகளை மட்டும் தான் மனம் காட்ட வேண்டும் என்று நமது மனதிற்கு நாம் கட்டளை போட முடியாது. நமக்கு வந்திருக்கும் உணர்வுகளை செயலுக்குத் தேவையெனில் எடுத்து பயன்படுத்திக் கொள்ளலாம். தேவையில்லை எனில் அப்படியே விட்டுவிட்டால் போதும் தானாகவே தோன்றிய உணர்வு தானாகவே மறைந்துவிடும்.

இங்கு மனதின் இயக்கத்தில் நாம் எதுவுமே செய்வதில்லை. மனதில் தோன்றும் உணர்வுகளையும் எண்ணங்களையும் புறச் செயலுக்குத் தேவை எனில் பயன்பாடுத்திக் கொள்ளலாம்.

மனோரீதியாக நாம் பிடித்துக் கொண்டிருக்கிற அத்தனை மனோ அனுபவங்களிலிருந்தும் விடுபடுவதே இந்த விடுதலை இயக்கம்.

மனதின் இயக்கத்தில் நாம் செய்வதற்கு எதுவும் இல்லை என்பதை கண்டுபிடிக்கும் ஒரே ஒரு வேலை மட்டுமே உள்ளது. அதை கண்டுபிடித்த பின் நமக்கு மனதின் இயக்கத்தில் எந்த ஒரு வேலையும் இல்லை என்ற புரிதல் ஒன்று மட்டுமே போதுமானது.

இதுவரை வந்த ஆன்மிக அமைப்புகளின் செயல்பாட்டிலிருந்து முழுவதுமாக வேறுபட்டு ஒரு புதிய அணுகுமுறையில் ஸ்ரீ பகவத்ஜயா அவர்கள் ஞானத்தை வழங்குகிறார்கள். தனது நாற்பது ஆண்டுகள் தேடுதலின் பயனாக சரியான அணுகுமுறையை கண்டுபிடித்து அனைவரும் எளிதாக புரிந்து கொள்ளும் வகையில் வழங்கிவருகிறார்கள்.

இந்த எளிமையான அணுகுமுறையினால் ஞானம் மிகவும் எளிமையாக பட்டுவிட்டது. காய்கறி கடைக்கார், ஆட்டோ ஓட்டுநர் என பாமர மக்களும் மனதின் இயக்கத்தை எளிமையாக புரிந்து கொள்ள முடிகிறது.

மனதில் ஏதோ ஒன்றை செய்து எதையாவது அடைவது என்ற பழைய ஆன்மிக அணுகுமுறையிலிருந்து விடுபட்டு இயற்கையான மனதின் இயக்கத்தில் நாம் எந்த குறுக்கீடும் செய்யாது நாமாகப் பற்றி பிடித்துக் கொண்டிருக்கிற மனோ அனுபவங்களான எண்ண உணர்வுகளின் பிடியில் இருந்து விடுபடுவதே விடுதலை – முக்தி – மோட்சம் எனப் புரிய வைக்கிறது இவரது அணுகுமுறை.

இதுவரை ஆன்மிகத்தில் விடுதலைக்காக கொடுக்கப்பட்ட அத்தனை பயிற்சி முயற்சி முறைகளினால் விடுதலையை நம்மால் அடைய முடியவில்லை.

சுதந்திரமான மனதின் இயக்கத்தில் நமக்கு எந்த ஒரு வேலையும் இல்லை என்ற அறிவியல் ரீதியான புரிதல் ஒன்று மட்டுமே போதும். இப்படி தெளிவாக புரிந்து கொள்வதால் விடுதலை என்பது தாமாக நிகழ்ந்துவிடுகிறது.

எல்லா ஆன்மிக அமைப்புகளின் அணுகுமுறையும் மனப் பயிற்சியின் மூலம் அடைதல் முறையையே போதிக்கின்றன.

அடைதல் முறையில் விடுதலை ஏற்பட சாத்தியமே இல்லை.

ஏனெனில் விடுதலை என்பது நாம் அடையும் நிலை அல்ல ; நமது இயற்கையான நிலையே.

தேவையற்ற மனதின் பிடியில் இருந்து விடுபடுவதே விடுதலை.

– இதுவே ஸ்ரீ பகவத் ஐயாவின் விடுதல் அணுகுமுறை.



K.S. ஜீவமணி
செல் : 97891 65555

# ஆசிரியர் பகுதி

அனைவருக்கும் சக பயணியின் வணக்கம்.

'எல்லாவற்றையும் கடந்து சென்று கொண்டிருக்கிறோம்' என்பதை விட, 'எல்லாம் தாமாக கடந்து சென்று கொண்டிருக்கிறது' என்பதே சரியானது.

சிலவற்றோடு முரண்படுகிறோம் சிலவற்றோடு உடன்படுகிறோம்.

உடன் படும்போதெல்லாம் நமது பயணம் எளிதாகவும் முரண்படும் போதெல்லாம் நமது பயணத்தில் தொய்வும் ஏற்பட்டு விடுகிறது.

வாழ்க்கையில் துன்பத்தைச் சந்திக்கும் போதுதான் ஆன்மிகம் சிந்தனைக்கு வருகிறது.

ஆன்மிகத்தில் தேடுதலை தொடங்கும் போதுதான் நமது வாழ்வு, ஆன்மிக வாழ்வு என்றும் உலகியல் வாழ்வு என்றும் இருவேறு வாழ்க்கை இருப்பதாக உணர்கிறோம்.

ஆன்மிக வாழ்வு என்பது அனுஷ்டானங்கள் நிறைந்து பக்திக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு உலகியலுக்கு எதிரான வாழ்வாக கருதப்படுகிறது.

ஆன்மிகத்தில் தேடுதல் நிறைவடையும் போதுதான் இருவேறு பிரிவாக இருந்த ஆன்மிக வாழ்வும் உலகியல் வாழ்வும் இணைந்த விடுதலையான வாழ்வாக மாறுகிறது.

உலகில் எத்தனையோ ஆன்மிக அமைப்புகள் ஆன்மிகத் தேடுதலை தூண்டுவதாக அமைந்து உள்ளன.

நமது ஸ்ரீபகவத் ஐயாவின் அணுகுமுறையில் ஆன்மிகத் தேடுதலை நிறைவுக்கு கொண்டுவந்து இருவேறு பிரிவாக இருந்த ஆன்மிக வாழ்வும் உலகியல் வாழ்வும் இணைந்த வாழ்வாக இயல்பாகவே அமைந்து விடுகிறது.

ஆன்மிகத்தில் தேடுதல் என்பது அஸ்திவாரம் போன்றது. வாழ்க்கையின் அடித்தளமாக அமைந்துள்ளது.

தேடுதலில் நிறைவு என்பது அஸ்திவாரத்தின் மீது எழுப்பப்படும் நமது வீடு போன்றது.

இதில் எதையுமே புறக்கணிக்க முடியாது.

அஸ்திவாரத்தை கட்டி விட்டால் அதில் வீட்டைக் கட்டி குடியேறிவிட வேண்டும். அஸ்திவாரத்திலேயே தங்கிவிடக் கூடாது. இது சரியானதல்ல.

அஸ்திவாரம் வலுவாக இருந்தால் வீடு நமது வசதிக்கேற்ப கட்டிக் கொள்ளலாம். வீடுதான் நாம் வசிப்பதற்கான சரியான இடம்.

அதுபோல் அனுஷ்டானங்களை கடந்து விடுதலையோடு வாழ்வதே சரியான வாழ்வு- முழுமையான வாழ்வு.

ஆன்மிகத்தில் தேடுதலை நிறைவுக்கு கொண்டுவந்து அக-விடுதலையை வழங்குவதே ஐயாவின் அணுகுமுறை.

இந்த சரியான அணுகுமுறையில் தற்போது ஆயிரக்கணக்கானோர் பயனடைந்து வருகின்றனர்.

இது இன்னும் பல்லாயிரக்கணக்கானோரை சென்றடையும் முயற்சியாகவே நமது ஸ்ரீ பகவத் மிஷன் செயல்பட்டு வருகிறது.

அதற்காகவே தினம்தோறும் ஆன்லைனில் சத்சங்கம் நடைபெற்று வருகிறது. விரைவில் முகாம்களும் ஏற்பாடு செய்ய உள்ளோம். பகவத் பாதை வழியாகவும் பல இல்லங்களுக்கு ஞானத்தை கொண்டுசேர்த்து கொண்டிருக்கிறோம்.

உண்மையை உலகிற்கு கொண்டு செல்ல அனைவரும் ஒன்றிணைவோம். அனைவரின் மனதிலும் ஒளியேற்றுவோம்.

## பகவத் பாதை மாத இதழ் *Free Download*

நமது **பகவத் பாதை** தமிழ் மாத இதழ் 2011ஆம் ஆண்டு அக்டோபர் மாதமும் **Bagavath Path** என்ற ஆங்கில மாத இதழ் 2016ஆம் ஆண்டு அக்டோபர் மாதமும் தொடங்கப்பட்டது.

தொடக்கத்திலிருந்து இன்றுவரை உள்ள அனைத்து மாத இதழ்களையும் இலவசமாக download செய்து படிக்கலாம்.



For Magazine Download

## ஸ்ரீ பகவத் ஐயாவின் தமிழ் மற்றும் ஆங்கில நூல்கள் *Free Download*

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் தமிழ் மற்றும் ஆங்கில நூல்கள் அனைத்தையும் (ஞான வாழ்வின் நடைமுறை யதார்த்தங்கள் நூலைத் தவிர) கீழே கொடுக்கப்பட்டுள்ள இணையத்தள முகவரியில் இலவசமாக download செய்து படிக்கலாம். **www.sribagavathmission.org**



Books PDF Download

அன்புடன் **ஸ்ரீபகவத் மிஷன்,** 31, இராமலிங்க சாமி தெரு,அம்மாபேட்டை, சேலம்-636003.
9994205880, 9789165555,7904118421.

# ஜென் கதை

## மனமென்னும் மா விருந்து

ஒரு பேரரசன் இருந்தான். பரந்த தேசத்தை தன் கட்டுப்பாட்டில் வைத்திருந்தான்.

ஆனால் மனதை கட்டுப்படுத்த முடியாமல் போராடிக் கொண்டிருந்தான்.

மனதில் தோன்றும் எதிர்மறை எண்ணங்களோடும் தேவையற்ற உணர்வுகளோடும் அவனது போராட்டம் தொடர்ந்து கொண்டேதான் இருந்தது.

தன் மனதில் இருந்து தேவையற்ற உணர்வுகளையும் எதிர்மறை எண்ணங்களையும் அப்புறப்படுத்த தீவிர பயிற்சிகளையும் முயற்சிகளையும் செய்தான்.

ஆனால் அவனால் வெற்றி கொள்ள முடியவில்லை.

அவனை சந்திக்க அவனுடைய நாட்டிற்கு மிகவும் புகழ்பெற்ற ஞானி ஒருவர் வருவதாக தகவல் அனுப்பினார்.

அந்த ஞானி பலருக்கும் தீர்க்க முடியாத மனப் பிரச்சனைகளுக்கு தீர்வு வழங்கியுள்ளார்.

இதை அறிந்த அரசன், அவர் வருகின்ற இந்த வாய்ப்பைப் பயன்படுத்தி தன் மனப் பிரச்சனைகளுக்கான தீர்வை அவரிடம் பெற்றுவிட வேண்டும் என்று ஆவலுடன் அவரை சிறப்பாக வரவேற்க ஏற்பாடு செய்தான்.

ஞானியின் வரவை நாடே கோலாகலமாகக் கொண்டாடியது.

ஞானியை வரவேற்ற அரசன் அவரை நன்கு உபசரித்து தனிமையில் அவரை அழைத்துச் சென்று தனது பிரச்சனையை எடுத்துக் கூறி மனதைக் கட்டுப்படுத்த தீர்வு கேட்டான்.

ஞானி, "மனதை ஒரு குறுகிய நேரம் கட்டிப் போடலாமே தவிர, நிரந்தரமாகக் கட்டிப் போடுவது இயலாத காரியம்" என்றார்.

அரசன், "சுவாமி மனப் பிரச்சினையில் இருந்து விடுபட நிரந்தர தீர்வு எதுவும் இல்லையா?" என்றான்.

ஞானி, "இருக்கிறது அதுதான் விடுதலை – முக்தி. ஒவ்வொரு மனிதனுக்கும் தேவையான ஒன்று" என்று கூறினார்.

அரசன், "சுவாமி முக்தி அடைந்த நிலையில் மனதில் உள்ள தேவையற்ற உணர்வுகளையும் எதிர்மறை எண்ணங்களையும் நீக்கிவிட முடியுமா?" என கேட்டான்.

ஞானி, "எதையும் நீ நீக்கத் தேவையில்லை. தேவையானதை நீ பயன்படுத்திக் கொண்டால் மட்டும் போதும்." என்றார்.

அரசன், "சுவாமி நீங்கள் கூறுவது எதுவும் எனக்கு புரியவில்லையே. கொஞ்சம் புரியும்படி கூறுங்களேன்" என்றான்.

ஞானி, "சரி, இன்று இரவு விருந்துக்கு ஏற்பாடு செய். உணவு வகைகள் எனக்கு மிகவும் பிடித்தமானதாக இருக்க வேண்டும். விருந்துக்குப் பிறகு உனக்குப் புரியும் படி விளக்குகிறேன்." என்று கூறிவிட்டு ஓய்வெடுக்கச் சென்று விட்டார்.

ஞானியே, 'விருந்து வை' என்று கேட்டு விட்டதால் மிகவும் பிரம்மாண்டமான விருந்தை ஏற்பாடு செய்தான் அரசன்.

ஞானி, அவருக்குப் பிடித்தமான உணவு வகைகளை ஏற்பாடு செய்யச் சொன்னதால் அவருக்கு என்ன பிடிக்கும் என்ன பிடிக்காது என்பது தெரியாமல் மிகவும் குழம்பிப் போனான்.

இருப்பினும் அவரை மகிழ்விக்க வேண்டும் என்பதற்காக ஒவ்வொரு உணவிலும் அதில் உள்ள அனைத்து வகைகளையும் ஏற்பாடு செய்தான்.

உதாரணமாக பழரசத்தை எடுத்துக் கொண்டால், உலகில் உள்ள அனைத்து வகையான பழ இரசங்களையும் ஏற்பாடு செய்தான்.

இப்படி இனிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, புளிப்பு, கசப்பு, காரம் என அறு சுவையிலும் உள்ள அனைத்து வகைகளையும் சிறந்த சமையல் கலை வல்லுநர்களை வைத்து சுவையாக ஏற்பாடு செய்தான்.

ஞானி, இப்படி ஒரு சிறந்த விருந்தை இதற்கு முன்னர் பார்த்திருக்கக் கூடாது என்கிற அளவுக்கு மிகப்பெரிய விருந்தை ஏற்பாடு செய்தான்.

விருந்துக்கு பல முக்கியஸ்தர்களையும் அவனுக்கு கீழ் ஆட்சி செய்யும் குறுநில மன்னர்கள் அனைவரையும் அழைத்திருந்தான்.

விருந்துக்கான நேரம் நெருங்கியது. ஓய்வில்

இருந்த ஞானியை விருந்து நடக்கும் வளாகத்திற்கு அழைத்து வந்தான் அரசன்.

மாபெரும் விருந்தை பார்த்து ஞானி மிகவும் மகிழ்வார் என எதிர்பார்த்தான் அரசன்.

ஞானியோ பழரசங்கள் இருக்கும் பகுதியை பார்த்தார்.

"திராட்சை ரசம் எனக்கு பிடிக்கவே பிடிக்காது. அதை ஏன் வைத்திருக்கிறீர்கள்?" எனக் கேட்டு கோபம் அடைந்தார்.

பிறகு இனிப்பு பகுதிக்குச் சென்றார். "எனக்குப் பிடிக்காத இனிப்புவகைகள் ஒரு சில உள்ளன. அதை ஏன் வைத்திருக்கிறீர்கள்?" எனக் கோபமாக கேட்டார்.

இப்படி ஒவ்வொரு உணவு பகுதிக்கும் சென்று "எனக்கு பிடிக்காதது ஏன் வைத்துள்ளீர்கள்?" என கேட்டு கோபம் அடைந்தார்.

அரசருக்கு ஒன்றும் புரியவில்லை.

சுதாகரித்துக் கொண்டு, "சுவாமி உங்களுக்கு எது தேவை? எது தேவையில்லை? என்று எனக்குத் தெரியாது. இங்கு அனைத்து வகைகளும் உள்ளன. அனைத்து உணவு வகைகளும் இருந்தால்தான் அது ஒரு சிறந்த விருந்தாக இருக்க முடியும். இதில் உங்களுக்கு தேவையானதை மட்டும் எடுத்துக் கொள்ளுங்கள். தேவையில்லாததை அப்படியே விட்டு விடுங்கள்" என்று பணிவுடன் கேட்டுக் கொண்டான்.

ஞானி, அரசனின் முகத்தை சாந்தமாக பார்த்து விட்டு புன்முறுவலுடன் பேச ஆரம்பித்தார்:

"அரசரே, உண்மையில் இது மிகச் சிறந்த விருந்துதான். இதில் இல்லாத உணவு வகைகளே இல்லை. இதில் எனக்குத் தேவையானதை எடுத்துக் கொள்வதே சரி. தேவையில்லாதவற்றை அப்படியே விட்டு விட்டால் போதும். நான் எடுத்துக் கொள்வது மட்டுமே எனக்குச் சொந்தம். மற்றவை எனக்குச் சொந்தமானது அல்ல...

"இதைப்போல் தான் நம் மனமும் இறைவன் நமக்கு அளித்திருக்கும் மாபெரும் விருந்து. எல்லா வகையான எண்ணங்களும் உணர்வுகளும் உள்ளன. உங்களுக்குத் தேவையானவற்றை எடுத்துக் கொள்ளுங்கள். தேவையில்லாத எண்ணங்களுக்கும் உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கத் தேவையில்லை. எல்லா எண்ணங்களும் உணர்வுகளும் உங்களுக்கு சொந்தமானது அல்ல. புறக் காரியங்களுக்கு தேவையான எண்ணங்களுக்கும் உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுங்கள். மற்றவைகளோடு போராடத் தேவையில்லை. அவைகள் உங்களுக்குச் சொந்தமானவை அல்ல என்று விடுபட்டு இருந்தாலே போதும். அதனோடு பந்தம் இல்லாமல் இருந்தாலே போதும்" என்றார் ஞானி.

அரசன் நன்கு விளங்கிக் கொண்டான்.

அவனுக்கு மிகப் பெரிய பாரத்தை மனதில் இருந்து இறக்கி வைத்தது போல் இருந்தது.

மாபெரும் உண்மையை எளிமையாக விளங்க வைத்த ஞானியின் பாதம் பணிந்தான் அரசன்.

# நிகழ்ச்சி நிழல்கள்

















# புரவலர்கள்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீபகவத் மிஷனில் வருவாய் ஈட்டும் நோக்கத்தோடு எந்தச் செயலும் செய்வதில்லை.

அய்யாவின் கருத்துக்களை உலகம் முழுவதும் உள்ள ஆன்மிகத் தேடுதல் மிகுந்தவர்களிடத்தும், மனவேதனைகள் உள்ளவர்களிடத்தும் கொண்டு செல்ல வேண்டும் என்பது மட்டுமே நமது நோக்கம்.

இதன் காரணமாகவே ஐயாவின் அனைத்து நூல்களையும் மாத இதழ்களையும் இலவசமாக download செய்துகொள்ளும் வசதியையும், மிகக்


Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555


குறைந்த விலையில் ஐயாவின் நூல்களையும் வழங்கி வருகிறோம்.

எனவே ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் வேண்டுகோளை ஏற்று தாங்களாகவே முன் வந்து அய்யா அவர்களது தனிப்பட்ட செலவுகளிலும் ஸ்ரீ பகவத் பவனின் செலவுகளிலும் பங்கு கொள்ளப் பலர் புரவலர்களாக இணைந்து பகவத் ஐயாவின் குடும்ப உறுப்பினர்கள்தாம் என உறுதி செய்துள்ளீர்கள்.

உங்கள் அனைவருக்கும் எங்களது உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இது வரை ஆயிரக்கணக்கானவர்கள் ஐயாவின் கருத்துகளினால் ஞானமடைந்துள்ளனர். இன்னும் ஆயிரக்கணக்கானவர்கள் ஞானமடையக் காத்திருக்கின்றனர்.

ஆன்மிக உலகில் இது வரை இத்தகைய மாற்றம் ஏற்பட்டது இல்லை. இது ஒரு புதிய சகாப்தம்.

இதற்கு முன்னால் எங்கோ ஒருவர் எப்படியோ ஞானமடைந்திருப்பார். ஆனால் இப்போது எவர் வேண்டுமானாலும் ஞானமடையலாம் என்ற அளவில் ஞானமும் முக்தியும் எளிதாக்கப்பட்டுவிட்டன.

ஆன்மிகத்தில் பல காலத்தேடுதலில் கூட கிடைக்காத ஞானத் தெளிவு ஐயாவின் புதிய சரியான அணுகுமுறையினால் எளிதில் பலரும் துன்பங்களையும் துயரங்களையும் கடந்து விடுதலையோடு வாழ்ந்து வருகின்றனர்.

ஆன்மிக ரீதியாகவும் உளவியல் ரீதியாகவும் புதிய மாற்றத்தை ஏற்படுத்தக் காரணமான நமது அய்யாவுடன் நாம் அனைவரும் முதல் நிலை குடும்ப உறுப்பினர்களாகப் பங்கு வகித்திட இதனை ஒரு நல் வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொள்வோமாக.

மேலும் புரவலராக இணைய வாய்ப்புள்ள அன்பர்கள் இணைந்து உதவுமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

இதன் மூலம் வியாபார நோக்கில் ஈடுபட்டு வருவாய் ஈட்டுவதில் நாட்டமில்லாத நமது ஸ்ரீ பகவத் மிஷன் மற்றும் ஸ்ரீ பகவத் பவன் ஆகியவற்றின் தொண்டிலும் அன்றாடச் செலவினங்களிலும் நீங்கள் பங்கேற்றிட முடியும்.

மாதந்தோறும் ரூ1000/= வழங்கும் புரவலராகவோ அல்லது மாதந்தோறும் ரூ500/= வழங்கும் சிறப்புப் புரவலராகவோ பொறுப்பேற்றிட வேண்டுகிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன் Account HDFC Bank & SBI Bank ல் உள்ளது. இவற்றில் எதில் வேண்டுமானாலும் அனுப்பலாம்.

**Sri Bagavath Mission,** Hdfc bank A/c No.15907620000075 NEFT IFSC : HDFC0001590
**Sri Bagavath Mission,** SBI Bank A/c No. 31784345329 IFS Code: SBIN0012772

அன்புடன்
**ஜீவமணி & சரவணன்,** ஸ்ரீ பகவத் மிஷன்.




அனைவருக்கும் வணக்கம்.

**ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் மிக முக்கியமான நூல் "கவலைகள் அனைத்திற்கும் தீர்வு"** எனும் நூல்.

இந்நூல் மனிதகுலத்தின் எல்லா துக்கங்களையும் துயரங்களையும் எளிதில் கடந்து செல்லும் வல்லமையை கொடுத்து ஞானத்தெளிவை வழங்கும் நூல்.

இந்நூல் 258பக்கங்களில் மிகவும் தரமான முறையில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

இதுவரை இந்நூல் ரூபாய் **250/-** க்கு வழங்கி வந்தோம். தற்போது இந்நூல் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இந்நூலை அதன் அடக்கச் செலவைவிட குறைந்த விலையில், ரூபாய் **50/-** க்கு வழங்கி வருகிறோம்.

எனவே அனைவரும் வாங்கிப் பயன் பெறுவதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அன்பளிப்பாக வழங்கி அவர்களும் உயர்வு பெற உதவலாம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்**